29th March 1961]

*Handloom weavers (indebtedness)*

*1155 *Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Industries be pleased to state the details of the scheme for relieving the indebtedness of handloom weavers in the State?

THE HON. SRI R. VENKATARAMAN: The information is furnished in the paper [a] placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், இப்போது ஒதுக்கியிருக்கக்கூடிய தொகை போதாது. மேலும் அதிகமாக ஒதுக்கித் தர வேண்டும் என்று கைத்தறி போர்டு மூலமாகக் கேட்டுள்ளார்களா? ஆகவே அது போன்று அதிகப்படுத்த மீண்டும் புனராலோசனை செய்யும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN: இதுபட்ஜெட் விவாதத்திலே சொல்ல வேண்டியது.

SRI S. M. ANNAMALAI: ஸார், இந்த அறிக்கையில் ஒரு கைத்தறி நெசவாளிக்கு 150 ரூபாய் கடன கொடுக்க முடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறதே. அதே போன்று மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் 1,750 நெசவாளிகளுக்குக் கடன் கொடுக்கத் திட்டமிடப்பட்டிருக்கின்றது என்று சொன்னது அங்கீகரிக்கப்பட்டால் 1,750 குடும்பங்களுக்கு கடன் கொடுத்துவிட்டால் கைத்தறி நெசவாளர்களின் குறை நீங்கிவிடுமா? இதை மேலும் உயர்த்த சர்க்கார் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் இதையும் பட்ஜெட் விவாதத்தின்போது சொல்ல வேண்டும்.

*Orchards (varieties and acreage)*

*1156 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் நமது ராஜ்யத்தில் என்னென்ன பழத் தோட்டங்கள், எத்தனை ஏக்கரா உள்ளன, ஜில்லாவாரியாக?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The figures for 1960 are not available. The collection of accurate data is in progress under the Fruit Development Scheme. However, the figures for 1957–58 are furnished in the statement [b] placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN: மேஜை மேல் வைக்கப்பட்டிருக்கிற இந்த ஸ்டேட்மெண்டிலே வட ஆற்காடு ஜில்லாவிலே ஸிட்ரஸ் ஃப்ரூட்ஸ் என்று சொன்னால் சாத்துக்குடி முதல் புளிப்பு எலுமிச்சைத் தோட்டம் எல்லாம் வரும். சாத்துக்குடி என்று சொன்னால் வட ஆற்காடிலே சாத்கட் என்ற இடத்தில் விளைந்த பழத்தை நவாப் சாப்பிட்டுவிட்டு சாத்துகட் பழம் என்று அழைத்தால் அதற்கே சாத்துக்குடி பழம் என்று

a Printed as Appendix II on pages 409-410 infra.

b Printed as Appendix III on page 410 infra.

பெயர் வந்தது. சாத்துக்குடி பயிராகக்கூடிய நிலத்தின் அளவு குறைந்து வருகிறதே, அதை மேலும் அபிவிருத்தி செய்ய சர்க்கார் என்ன முயற்சி எடுத்துககொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நவாப் காலத்தி லிருந்து வருகிறதோ அல்லது முன்னேயிருந்து வருகிறதோ தெரியாது. அதிகப்படுத்தத்தான் புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

SRI A. A. RASHEED: From the statement placed on the table of the House, we find that only in 5 acres, other fresh fruit trees have been planted in the North Arcot district. May I know the reason for planting these trees only in a small extent of land, viz., 5 acres?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஆங்காங்கு உள்ள மக்கள்—வட ஆற்காடு மாவட்ட மக்கள்—அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் இ நிலிருந்து விளங்குகிறது.

SRI S. M. ANNAMALAI: ஸார், நம் நாட்டு மாம்பழத்திற்கு வெளி நாடுகளில் நல்ல கிராக்கி இருக்கிறது என்று சொல்லப்படுகிறதே, வெளி நாடுகளிலிருக்கிற வெள்ளேயர்கள் கூடமாம்பழத்தை விரும்பிச் சாப்பிடுகிறார்கள் என்று சொல்லப்படுகிறதே, அதனுல் இதை மேலும் ஏற்றுமதி செய்ய சர்க்கார் என்ன முயற்சிகள் எடுத்துக் கொணடிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: வெளி நாடுகளில் மாம்பழம் உண்மையில் விரும்பப்படுகிறது. வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டுமானுல் போதிய அளவு மாம்பழ உற்பத்தி பெருக வேண்டும். இங்கே உள்ளவர்களும் சாப்பிட வேண்டும். ஆகவே நம் தேவைக்கும் அதிகமாக உற்பத்தி செய்ய முதலில் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN: இங்கே வைத்திருக்கிற ஸ்டேட்மெண்ட்படி சேலம் ஜில்லாவிலும், வட ஆற்காடு ஜில்லாவிலும் மாம்பழத் தோட்டம் அதிகமாக இருப்பதாகத் தெரிகிறது. ஆகவே மாம் பழம் கிடைக்காத காலத்தில் கூடபழங்களைப் பதனப்படுத்தி சாப்பிடக்கூடிய அளவுக்கு, அதற்கான தொழிற்சாலேகளே இந்த இரண்டு ஜில்லாக்களிலும் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: தொழிற்சாலே அமைப்பது வேறு விஷயம். அதிலும் கவனம் செலுத்தப்படும். ஆனுல் மாம்பழம் காய்க்காத, பழுக்காத காலத்தில்கூட வேண்டுமென்ருல் பழைய மாம்பழத்தை வைத்துக்கொள்வதில் பிரயோசனம் இல்லே. கன்னியா குமரியில் ஆராய்ச்சி நடக்கிறது. வேறு இடங்களிலும் இது தொடரப்பட்டு வருகிறது. எல்லாக் காலங்களிலும் மாம்பழம் கிடைக்கும் முறையில் செடிகள் வைத்து வளர்க்கப்படுகின்றன.

SRI T. S. RAMASWAMY: "ஆஃப் ஸீஸன் மாங்கோஸ்" கன்னியாகுமரியில் கிடைப்பது போல எல்லா ஜில்லாக்களிலும் கிடைக்க ஆங்காங்கே பயிர் செய்ய முடியுமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கன்னியாகுமரியில் ஆராய்ச்சி நிலேயம் இருக்கிறது. மேலும் ஆராய்ச்சி செய்து வேறு எந்தெந்த இடத்தில் இதை வளர்க்கலாம் என்பது கவனிக்கப்படும்.

### *Import of contraband goods*

*1157 Q.—SRI P. G. MANICKAM: கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் அயல் நாடுகளிலிருந்து நம் மாநிலத்தில் விற்பனேக்காக கள்ளத்தனமாய் இறக்குமதி செய்யப்பட்ட சாமான்கள் சம்பந்தமாய் எத்தனே வழக்குகள நம் மாநிலப் போலீஸாரால் பதிவு செய்யப்பட்டன ?